M. F. David

*சின்னஞ்சிறிய என் சகோதரருள் ஒருவனுக்கு நீங்கள் இவற்றைச் செய்த போதெல்லாம் எனக்கே செய்தீர்கள்* (மத். 25: 40)




# புனித வின்சென் டி போல் சபையின்

# பந்திகளின் விதிகள்.

*மத்திய சபை வெளியீடு*

## சபையின் பாதுகாவலர்

# புனித வின்செண் டி போல்

## (குறுகிய சரிதை)

1581 ஆம் ஆண்டில் லூர்து நகருக்கு வடகிழக்கில், 60 மைல்களுக்கு அப்பாலுள்ள பிற்போக்கான ''போயுயிக்'' கிராமத்தில் வின்சென் டி போல் பிறந்தார். கல்வியின்மை வறுமை, சாதாரண எளிமையான வாழ்க்கை என்பவற்றை அனுபவித்த இவர், இக்கட்டான காலங்களில் பொறுமையைக் கடைப்பிடித்தார். இறைவன் மீது அசையாத நம்பிக்கை கொண்டிருந்தார். அக்காலத்துச் செல்வந்தர்கள் தம் நேரத்தையும் பணத்தையும் செலவு செய்த முறைகளை முற்றாக வெறுத்தார். இவரது 12 ஆவது வயதில் இவர் தந்தை நியாயவாதி ஒருவரது தூண்டுதலால் இவரைக் கல்லூரிக்கு அனுப்பிக் கல்வி பயிலவைத்தார்.

வின்சென் டி போல் இறையியல் கல்வி கற்கும் போதே இவர் தந்தை இறையடி சேர்ந்தார். 1600 ஆம் ஆண்டு புரட்டாதி 23 ஆம் நாள் குருவாகத் திரு நிலைப்படுத்தப்பட்டார். ஓர் மூதாட்டி தன் சொத்துக்களை வின்சென்றுக்கு எழுதி வைத்துவிட்டுக் காலமானதைத் தொடர்ந்து, அச் சொத்துக்களைப் பார்வையிட இவர் செல்ல நேர்ந்தது. திரும்பி வரும் போது கப்பலில் பயணஞ் செய்தார். கப்பல் கொள்ளையடிக்கப்பட்டு, அதில் பிடிக்கப்பட்ட அனைவரும் கொள்ளைக்காரரால் அடிமைகளாக விற்கப்பட்டனர். வின்சென்றை வாங்கிய துருக்கிய மருந்தாளர் ஓர் ஆண்டின் பின்பு தனது மருமக்களிடம் பணிபுரிய இவரை அனுப்பி வைத்தார். இரண்டு ஆண்டுகளின் பின் தப்பிச் சென்று பிரான்ஸை அடைந்தார்.

சொந்த நாட்டில் அறிமுகமற்றவராகவும், பணமில்லாதவராகவும் இருந்தும், மனங்கலங்காமல் தனது குருத்துவ நிலைப்படுத்தல் சான்றிதழ் அனுப்பி வைக்குமாறு அவிக்னன் நகரிலிருந்து தனது சுதேசிப் பங்கிற்கு விண்ணப்பம் செய்து கொண்டார். இத்தாலியில் குருமுதல்வரைச் சந்தித்து அவரது நட்பையும் அனுதாபத்தையும் பெற்றார். துருக்கிய மருத்தாளரிடம் அடிமையாய் வாழ்ந்த அந்த இளங்குருவை குருமுதல்வர் றோமை நகருக்கு அனுப்பினார். பாப்பரசரின் மதிப்பைப் பெற்ற வின்சென்ற், பிரான்சின் 4 ஆம் ஹென்றி அரசரிடம் தூதுவராகப் பரீஸுக்கு அனுப்பி வைக்கப்பட்டார். துன்ப

துயரங்களுக்கு முகங் கொடுத்து, வாழ்வின் மேடு பள்ளங்களின் தாக்கத்தால் உருவாக்கப்பட்டுக் கிறீஸ்தவ மதிப்பீடுகளில் வைராக்கியம் கொண்டவராய் விளங்கிய வின்சென்ற், மனிதனது உயரிய ஆவல்களை இறைவன் மட்டுமே நிறைவு செய்ய முடியும் என்று அனுபவத்தில் கண்டுணர்ந்தார். பிரான்ஸில் இரு வேறுபட்ட நிலைமைகள் நிலவுவதை அவதானித்தார். ஒரு புறம் பிரபுக்கள்: அரச அபிமானமுள்ள செல்வந்தர், பெருமனைகளில் உல்லாச வாழ்வு வாழ்ந்தனர். மறுபுறம் உரிமையற்ற - வறுமையிலும், அறியாமையிலும் உழன்ற - ஏழைகள் வாழ்க்கையென்ற பெயரில் அளவற்ற துன்பமுழ்றனர். நான்காம் ஹென்றியின் மனைவி "டி வெலோயில்" வின் செற்றைத் தன் ஆலோசகராகவும், குருவாகவும் கொண்டு, வைத்திய சாலைகளில் தன் ஈகை முதல்வராக நியமித்தாள். நோயாளர் சரியான கவனிப்பின்றி இருந்த நிலமையை மாற்றியமைப்பதில் வின்சென்ற் தன்முழுக் கவனத்தையும், காலத்தையும் செலவழித்தார். இக் காலகட்டத்தில் இவர் அண்டியிருந்த ஓர் நீதிபதியின் பணத்தைத் திருடியதாக இவர் மீது குற்றஞ் சுமத்தப்பட்டது. ஈற்றில் உண்மைக் குற்றவாளி கண்டு பிடிக்கப்பட்டாரெனினும் வின்சென்ற் மனத்துயர் அடைந்தார். இறை விசுவாசத்தில் ஐயப்பாடுற்ற ஓர் இறையியலாளருக்கு ஆலோசனை கூறப்போய்த் தானே அச்சோதனைக்கு ஆளாகித் தவித்தார். இந்நேரத்தில் ஆழ்ந்த ஆண்மீக உள்ளுணர்வு கொண்ட கருதினால் டிபியூன் இறையன்பில் அவிசுவாசப்படுதல் சரியல்லவென்று புத்திமதி கூறித் திருத்தினார்.

பரீஸ் நகர எல்லைப்புறத்திலிருந்த கிளிஞ்சி என்னும் கிராமத்தில் பங்குக் குருவாக நியமனம் பெற்ற வின்சென்ற், ஒரு வருடகாலம் இங்கு பணிபுரிந்தபின்பு, பரீஸ் நகரப் பேராயரின் சகோதரனாகிய தளபதி பிலிப் டி கொண்டியின் மக்களுக்கு ஆசிரியராகச் சென்றார். தளபதி கொண்டியின் தோட்டத்தில் வசித்த மக்களிடையே நிலவிய ஆன்மீக அலட்சியப் போக்கைத் திருத்த எண்ணி 1617 ஆம் ஆண்டு புனித சின்னப்பர் மனமாற்றம் அடைந்த தினமாகிய தை 25 ஆம் திகதி பொதுப் பாவசங்கீர்த்தனம் எனும் கருத்துப் பற்றிய மறையுரையை அவர்கள் மத்தியில் நிகழ்த்தினார். அதன் வெற்றியாகத் தளபதி கொண்டியின் தோட்டம் முழுவதற்கும் பொதுவானதோர் மறை அறிவிப்புக் குழு நியமிக்கப்பட்டது. இதன் பின்னர் வின்சென்ற் 'டோம்பஸ்" எனும் வரிய கிராமத்துக்குச் சென்று, அங்கு தன் பணியைத் தொடர்ந்தார். இறை வழிபாடுகளில் மக்களுக்கு இருந்த அலட்சியத்தை நீக்க அரும்பாடுபட்டார். தனது இனிய இயல்பாலும், சாதுரியத்தாலும் மக்களோடு பழகி, அவர்கள் மீண்டும் தேவாலய வழிபாடுகளில் ஊக்கத்துடன் பங்கு

பற்றச் செய்தார். ஓர் நாள் நகர எல்லையில் வசித்த ஏழைக் குடும்பம் பட்டினியாலும், நோயினாலும் இறக்கும் தறுவாயில் இருப்பதாக வின்சென்றுக்குச் செய்தி கிட்டியது. திருப்பலி வேளையில் விசுவாசிகள் மத்தியில் அக்குடும்பத்திற்காக உருக்கமான வேண்டுகோள் ஒன்றினை விடுத்தார். திருப்பலி முடிவுற்றதும் அக்குடும்பத்துக்கு வேண்டிய உணவுப் பண்டங்களுடன் மக்கள் திரும்பி வந்தனர். விளைவு உற்சாகமாக இருந்ததால் ''வண்டியுணவு'' என்ற தரும சபையைத் தொடக்கி, ஏழை எளியவர்களுக்கு உணவு வழங்க ஏற்பாடு செய்தார்.

தளபதி கொண்டி தன் செல்வாக்கினாலும் செபமுயற்சிகளாலும் வின்சென்றைத் திரும்பவும் தன் தோட்டத்திற்கு அழைப்பித்தார். அங்கே கப்பல்களில் தண்டுவலிக்கும் தண்டனை பெற்ற குற்றவாளிகளைக் கவனிக்கும் பணி கிடைத்தது. கசப்புணர்வு கொண்ட இப்பயங்கரக் குற்றவாளிகள் விரக்தியுற்ற நிலையிலும், நோய்களுக்காளான நிலையிலும், தேவ தூஷணஞ் சொல்லித் திட்டியும், படுமோசமான நிலையில் வாழ்ந்தனர். ஆனால் வின்சென்ற் தனது எல்லையற்ற அன்பினாலும், ஆழ்ந்த அனுதாபத்தினாலும், அவர்களைத் தம்வசப் படுத்தினார். நோய், பிணிக்கு மருந்தும், தூய உணவும் வழங்கி, அவர்களது நம்பிக்கையைப் பெற்ற பின் ஆன்மீக நலன்களைக் கவனித்தார்.

வெலன்வில் நகரில் அவர் ஆற்றிய மறையுரையும், தளபதி கொண்டியின் தூண்டுதலும் சேர்ந்து, பிரான்ஸ் தேசக் கிராம மக்களுக்கு நற்செய்தியைப் பரப்ப 'போதகக் குருக்கள் குழு'' ஒன்று உதயமாகச் செய்தது. இப்புதிய கட்டமைப்பு ''இறைத் தூதுவர் சபை'' என அழைக்கப்பட்டது. இவர்கள் தமது சொந்த இடத்தை விட்டுப் புறப்பட்டுக் கிராமங்களில் தங்கி ஆறு மாதங்களுக்கு, அங்கு வசிப்பவர்களின் நலன்களைக் கவனித்துப் பணி புரிந்து, பின் வீடு திரும்பினர். ஆங்காங்கே பணிமனைகள் அமைத்துத் தம் தூதுப் பணியைச் செவ்வனே செய்தனர். பிரதி வாரமும் செவ்வாய்க் கிழமைகளில் குருக்கள் ஒன்று கூடி, பணிச் சிறப்புப்பற்றிய கலந்துரையாடல்களை நடத்தினர். 'ஏழைகளை இறைவனின் மக்கள் என்ற மனப்பான்மையுடன் அணுக வேண்டும்'' என்று இவர்களுக்கு வின்சென்ற் கூறிவந்தார். புதிதாக இவர் ஒன்றும் கூறாத போதிலும்; இவரது நேர்மையும், தனிப்பட்ட தூய்மையும், விசுவாச சத்தியங்களுக்கு மெருகூட்டுவன போன்று அமைந்தன. இதனால் உயர் குருக்களின் நியமனங்களுக்குப் பொறுப்பாகவிருந்த, பிரதான சபையான

''மனச்சான்றுச் சபை''க்கு இவர் முதல்வரானார். செல்வந்த பிரபுக்களுடனும், குருசிரேஷ்டர்களுடனும் மோத வேண்டிய நிலை ஏற்பட்ட போதிலும், வின்சென்ற் இங்கும் சில ஊழல்களைக் களைந்தார். இவரது பணியின் பயனாகக் குருக்கள் மத்தியில் வியத்தகு முன்னேற்றம் காணப்பட்டது. செவ்வாய்க்கிழமைக் கலந்துரையாடல்களில் தவறாது பங்கெடுத்து, அநேகர் இறை தூதுப்பணியில் ஆர்வத்துடன் செயலாற்றினர். மக்களும் தொலை தூரங்களிலிருந்தும் வந்து ஆராதனைகளில் கலந்து கொண்டனர். 1625 க்கும் 1660 க்கும் இடைப்பட்ட காலத்தில் 840 இறைத் தூதுவர் தலைமையகத்தில் இருந்து பணிபுரியச் சென்றனர். 25 பணிமனைகள் செயற்பட்டன. வின்சென்ற் ஆரம்பித்து வைத்த 'வண்டியுணவுத் தருமம்' நாடளாவிய நிறுவனமாக வளர்ந்து விட்டது. ஆங்காங்கே வாழும் உயர் குலப் பெண்கள் இத்தரும நிர்வாகத்தைத் திறம்பட நடத்தினர். ஆனால் சில சமயங்களில் ஏழைகளின் குச்சு வீடுகளுக்குச் சென்று உணவு கொடுப்பதற்கு இவர்களது குடும்பத்தினர் தடை செய்தனர். நோயாளிகளைப் பராமரிப்பதையும் அவர்கள் விரும்பவில்லை. எனவே தரும சேவையில் ஈடுபடக்கூடிய சாதாரண பெண்கள் வின்சென்ற்றுக்குதவ முன்வந்தனர். விதவையான லீகிறாஸ் எனும் பெண்மணியின் தலைமையில் பரீஸில் ஒரு பயிற்சி நிலையம் ஆரம்பித்து, பல பெண்களுக்குச் சமையல், தையல், தாதிப்பயிற்சி எனும் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. இவ்வாறு சிறுக ஆரம்பித்த ''தர்மசீல மகளிர் சபை'' காலப் போக்கில் தீவிர வளர்ச்சியடைந்தது. பிரான்சியப் புரட்சியின் காரணமாக நாடு முழுவதும் நோயும், பசிப்பிணியும் தாண்டவமாடிற்று லோறேன் நகரில் அரசு அனுப்பிய உணவு வகைகளையும், மருந்து வகைகளையும், வின்சென்ற்றின் மூன்று தர்ம நிறுவனங்களும் மக்களுக்கு விநியோகித்து, மக்களைக் காப்பாற்றினர். பணிபுரியும் குருக்களும், மக்களும் பெருகப் பெருக, வின்சென்ற் அவர்களுடன் கடிதத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டார். இவரது ஆளுமை, ஞானம், மனிதநேயம், புனிதத்தன்மை என்பவற்றைப் பிரதிபலிக்கும் சுமார் 4000 கடிதங்கள் இன்னும் உள்ளன.

கிறீஸ்துவில் கொண்ட விசுவாசத்தினாலும், அதனால் மனிதர் மேற்கொண்ட கருணையினாலும், இவர் தமது 88 வயது வரை அயராது பணிபுரிந்தார். அவரது வாழ்வில் இறையன்பு முதலும், மனிதனுக்குச் செய்த உதவிகள் தொடர்புமாக இருந்தது.

''பணி செய்யப்படல் வேண்டும். யாரால் செய்யப்பட்ட தென்பதல்ல'' என்பதே இவரது தாரக மந்திரமாகும்.

## சபையின் ஸ்தாபகர்

# பிரெட்ரிக் ஓசானம்

### (குறுகிய சரிதை)

மிலான் நகரில், புகழ்மிக்க பரம்பரையில் பிறந்து, போர்வீரனாயிருந்துபின்னர் விழுப்புண்களின் வேதனையால் ஓய்வுபெற்றவர் ஜீன் அன்டொயின் ஓசானம். வாழ்க்கையின் முன்னேற்றத்திற்காகச் சுயவிடா முயற்சியால் வைத்தியக் கல்வியைக் கற்றுத் தேர்ந்து, புகழ்பெற்ற வைத்தியரானார். இவரது மனைவி மேரி தாண்டாஸ். இவர்களுக்குப் பதினான்கு பிள்ளைகள் பிறந்தனர். ஐந்தாவது மகனாக 1813ம் ஆண்டு சித்திரை மாதம் 23ந் திகதி பிரெட்ரிக் ஓசானம் பிறந்தார். இவர்களுள் 10 பேர் இறைவனடி சேர்ந்தனர். தப்பிப்பிழைத்த நால்வருள் ஒருத்தியான பிரெட்ரிக்கின் அக்கா எலிசபேத்தும் தனது 19வது வயதில் மரணமானார். இந்நிகழ்ச்சி பிடெரிக்கின் இளமுள்ளத்தை மிகவும் வருத்தியது. நல்லதோர் வழிகாட்டியான அக்கா இல்லாததினால், இவர் முற்கோபமும், பிடிவாதமுங் கொண்டு குழம்பித் திரிந்தார். தன்னுடைய இந்த முரண்பட்ட நிலையைத் திருத்த வேண்டுமென்ற நற்சிந்தனையால் - செபத்தினாலும், முயற்சியினாலும் மீண்டும் அமைதி கிட்டியது.

மிலானிலிருந்து லியோன் நகருக்குக் குடிபெயர்ந்த இக் குடும்பத்தில், தகப்பனார் ஏழைகளுக்கு இலவச சிகிச்சை புரிந்து, அவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்து வந்தார். தாயார் ''ஊழியர்'' என்னும் சங்கத்தில் சேர்ந்து, அதன் தலைவியாக உயர்ந்து, யாருமற்ற அனாதைகளையும், நோயாளர்களையும் தேடித்திரிந்து, இரவு பகல் பாராது, சேவை செய்து வந்தார். அவர்களது அடியொற்றி வளர்ந்த பிரெட்ரிக்கும் ஏழைகள் மட்டில் கருணை கொண்டவராகத் திகழ்ந்தார்.

பிரடெ்ரிக் உரிய வயதில் லியோன் நகரத்து றோயல் கல்லூரிக்குச் சென்று, தனது கல்வியை ஆரம்பித்தார். 13ஆவது வயதில் லத்தீன் மொழியில் தேர்ச்சிபெற்று, இலக்கியத்தில் மிகுந்த ஆர்வங் காட்டினார். கல்லூரிச் செய்தி இதழான ''தேனீ''யை நெறிப்படுத்தும் ஆற்றல் பெற்றார். 15 ஆவது வயதில் இவருக்கு இறைவன் மீதுள்ள பற்றுக் குறையத் தொடங்கியது. இச் சோதனையை வெல்லுவதற்காக வேண்டிய நம்பிக்கையையும், விசுவாசத்தையும் வலியுறுத்தும் நூல்களை ஏராளமாக வாசித்தும், அவரது மனம் கலங்கிய சேறு போலானது. இறுதியாகத் தத்துவப் பேராசிரியரான நொயிரட்டின் வழிகாட்டுதலால், நற்கருணைப் பக்தி கொண்டவராகவும், இறை நம்

பிக்கையை மீளப்பெற்றவராகவும் மாறினார். தத்துவ சாஸ்திரப் படிப்பை வெற்றியுடன் பூர்த்தி செய்த பிரெட்ரிக் வீடு திரும்பியதும், தகப்பனார் அவரை லியோன் நகரச் சட்டவல்லுநரான கூட் என்பவரிடம் அனுப்பி வைத்தார். சட்டவல்லுநர் அலுவலகத்தில் இருவருட ஆரம்ப அறிவைப் பெற்ற இவர், பிரதி எடுப்பதிலும், அறிக்கை பதிவதிலும் ஈடுபட்டார். ஜெர்மனியம், ஆங்கிலம், ஹீபுறு மொழிகளைக் கற்றுத் தேர்ந்தார். 1831ஆம் ஆண்டில் லியோன் நகரில் ஏற்பட்ட குழப்பத்தினால், கத்தோலிக்க சமயத்திற்கு எதிராகச் சைமன் என்பவர் கிறீஸ்தவ இறப்புப் பற்றிய புதிய கருத்தை எங்கும் பரப்பவே, மக்களிற் சிலர் அவரைப் பின்பற்றினர். இதனைக் கண்ணுற்ற பிரெட்ரிக் தனது 19ஆவது வயதில் இத் தப்பறையைக் கண்டித்து ''த பிரிகேசர்'' எனும் ஏட்டில் ஞானம், விவேகம், உறுதியுடன் உண்மை ஆதாரங்கள் அனைத்தையும் முன்வைத்து நீண்ட பல கட்டுரைகளை எழுதினார். பின்னர் பரீஸ்மாநகர் சென்று, சொர்போன் சட்டக் கல்லூரி விடுதியிற் சேர்ந்து, சட்டப்படிப்பை முடிப்பதற்கான கல்வியைத் தொடர்கையில், உடன்மாணவர்கள் காடையராகவும், கண்ணியமற்றவர்கள் ஆகவும் வாழ்வதைக் கண்டு மனங்கசந்தார். தனிமையுணர்வால் வாடினார். இவரது இலக்கிய எழுத்து ஆற்றல்களால் கவரப்பட்ட கணித மேதையும் விஞ்ஞானியுமான அந்ரே அம்பியர் என்பவரது நட்புக்கிடைத்தபின் மனந்தேறினார்.

புதிய சூழலில், ஆரம்பத்தில் சங்கடங்களைச் சந்தித்த பிரெட்ரிக் தமது எண்ணங்களுடன் ஒத்துப் போகக்கூடிய மாணவர்களுடன் நட்புக் கொண்டார். இவரின் இணைபிரியாத நண்பனாகத் திகழ்ந்த லலியர் என்பவருடன் பரீஸ் நகர அதி மேற்றிராணியார் டிகியூலனிடஞ் சென்று, ''மாறிவரும் சூழலுக்கு இசைவாகக் கிறிஸ்தவம் போதிக்கப்பட வேண்டிய அவசியவழி வகைகள் பற்றியும், அவ்வாறு போதிக்கும்போது ஏற்படக் கூடிய பிரச்சினைகளுக்குத் தீர்வு'' குறித்தும் ஓர் நீண்ட மனுவைக் கையளித்தார். 1832இல் திருச்சபைக்கு விரோதமாக வாதம் புரிந்த ஒரு தத்துவ விற்பன்னரைக் கிறீஸ்தவம் பற்றிய வாதப் போரில் வெற்றி கொண்டார். பின்னர் தன் நண்பர்களுடன் சேர்ந்து ஓர் ஆலோசனை மன்றத்தை அமைத்து இலக்கியம், சமயம், சரித்திரம், தத்துவம் முதலிய துறைகளைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைச் சமர்ப்பித்துக் கலந்துரையாடல்களை நடத்தினார். ஆரம்பத்தில் 15 உறுப்பினர்களுடன் ஆரம்பிக்கப்பட்ட மேற்படி சங்கம் 60 அங்கத்தினர்களைக் கொண்டு வளர்ச்சி அடைந்தது. இதன் தலைவராகத் தத்துவ வியல் பேராசிரியரான M. J. இம்மானுவல் பெயிலியும், உபதலைவராகப் பிரெட்ரிக்கும் தெரிவு செய்யப்பட்டனர்.

1833ஆம் ஆண்டில் இவ்வாலோசனைச் சங்கத்தின் விவாதம் நடைபெற்றுக் கொண்டிருக்கையில், கத்தோலிக்க திருச்சபையே

கிறீஸ்துவினால் உருவாகப்பட்ட உண்மைத் திருச்சபை என்பதைச் சரித்திர பூர்வமான ஆதாரங்களுடன் நிரூபிக்க பிரெட்ரிக்கும் அவரது ஆதரவாளர்களும் முயன்ற வேளையில், எதிர்க் கருத்துக் கொண்டகுழு, ''கத்தோலிக்க திருச்சபை பெரிதாகவும், நன்மைகளின் உறைவிடமாக வும், இருப்பது உண்மை. எனினும் இன்று இத்திருச்சபை பரீஸ் நகர ஏழைமக்களுக்காக என்ன வேலை செய்கிறது?'' என்ற கேள்வியை எழுப்பினர். அவ்வேளையில்தான் பிரெட்ரிக்கின் உள்ளத்தில் திருச்சபை போதனைகளால் மட்டுமின்றிச் சாதனைகளாலும் கட்டி எழுப்பப்பட வேண்டும் என்றும், தமது அப்போஸ்தலிக்கப் பணி இறைவனால் ஆசீர் வதிக்கப்பட வேண்டுமெனில் சாதரண சமூக சேவையல்ல, தருமசேவை ஆரம்பமாக வேண்டுமென்றும் எண்ணம் எழுந்தது.

1834இல் சட்டப் பரீட்சையில் சித்தியடைந்து, பின்னர் சட்டக் கலாநிதிக்கான கல்வியைக் கற்றுத் தேர்ந்து, அதிலும் வெற்றி கண்டார். புனித வின்சென் டி போலினால் ஆரம்பித்து வைக்கப்பட்ட தரும சபையில் சேவைபுரியும் பெண்களுடன் அறிமுகமாயிருந்த M. பெயிலி தம்பதியினரை ஆலோசனைச் சபையினர் சந்தித்து, ஏழைகளுடனான தொடர்புகளை உருவாக்கிக் கொண்டனர். இவ்விளைஞர்களின் சபைக் குத் தலைவராகத் தெரிவ செய்யப்பட்ட பெயிலி ''தருமசேவையை ஆன்மீக முன்னேற்றத்தின் திசையிலும், நீதியின் திசையிலும் செலுத் துங்கள். ஏழைகளின் உருவில் துன்புறும் கிறிஸ்துவைக் கண்டு, நற்சிந் தனையினால் உங்களைத் தூய்மைப்படுத்துங்கள்.'' என்று அறிவுரை கூறினார். பிரெட்ரிக்கின் மனதில் ஏழைகளுக்கு உதவுதல் மட்டும் எண்ணமாக இருக்கவில்லை. கவனிப்பார் இன்றிக் கிடக்கும் ஏழைகள் பற்றிப் பணம்படைத்த மனிதர் மனதில் எள்ளளவேனும் இரக்க சிந்தை உருவாகி, ஏழைகளின் பிரச்சனைகள் எவையென்பதை உணர்ந்து கொள்ளச் செய்யவேண்டும் என்ற நோக்கமும் இருந்தது. இவர்களது முதற் பொருளாளராக ஜூல்ஸ் டி வொக்ஸ் தெரிவுசெய்யப் பட்டார். கூட்டத்திலுள்ளோர் மத்தியில் இரகசியப் பை மூலமும், தலைவர் திரு. பெயிலி அவர்களின் ''கத்தலிக் ட்ரிபியூன்'' இதழின் சந்தா மூலமும், உபகாரிகள் உவந்தளிக்கும் பிச்சை மூலமாகவும், நிதி சேகரிக்கப்பட்டது. தரும சபையைச் சேர்ந்த சங். சகோதரி றோசலி இவர்களுக்குத் தம்மாலான அனைத்து உதவிகளையும் அளித்தார். முதலில் எட்டுப் பேர் மட்டும் அடங்கிய பிரெட்ரிக்கின் குழு எல்லோர் கவனத்தையும் கவரவில்லையெனினும், மெல்ல மெல்ல இக்குழுவின் அங்கத்தவர்கள் 15 பேராகினர்.

1834ஆம் ஆண்டு மாசித்திங்கள் 4ஆம்நாள் அன்று திரு. ஜீன் லியோன் லி பிரிவொஸ்ட் என்பவர் ''இத் தருமசபையானது புனித வின்சென் டி போலின் பாதுகாவலில் வைக்கப்படவேண்டும்'' என முன் மொழிந்தார். ஏற்கனவே இப்புனிதருடைய முன்மாதிரிகையான செயல், சிந்தனை, எழுத்துமூலம் உயிரூட்டம் பெற்ற இச்சபை இதனை முழு மனதுடன் அங்கிகரித்தது. அன்று முதல் இத்தரும சபை புனித வின் சென் டி போல் சபை என அழைக்கப்பட்டது. வருட முடிவில் உறுப்

பினர் தொகை 24 ஆக உயர்ந்தது. 1835ஆம் ஆண்டில் அங்கத்தவர்களின் தொகை 150 ஆக அதிகரித்ததனால், இரண்டாகப் பிரிந்து செயற்படத் தொடங்கியது. தரிசிக்கப்பட்ட ஏழைக் குடும்பங்கள் 350. ஏழை மாணவர்களின் கல்வி வளர்ச்சியில் கவனஞ் செலுத்திய பிரிவொஸ்ட் துறவு மேற்கொண்டு, சில தோழர்களைத் தம்முடன் சேர்த்துப் புனித வின்சென் டி போல் துறவற சபையை ஸ்தாபித்தார். சகல நகர்களிலும் இச்சபை வளர்ந்து பெருகியது. இவை அனைத்திற்கும் பொதுவாக பரீஸ் ஆலோசனைச் சபையின் அனுபவத்தின் அடிப்படையில், பிரெட்ரிக் ''சகோதரத்துவ அமைப்பு'' ஒன்றை உருவாக்கினார். இதற்கான ஒழுங்கு, விதிகள் லலியராலும், பெயிலி அவர்களாலும் வகுக்கப்பட்டன.

1836இல் நடைபெற்ற முதலாவது பொதுக்கூட்டத்தில் பொதுச் செயலாளர் லலியர், புனித வின்சென் டி போலின் படிப்பினைகளாலும், சிந்தனையினாலும், உயிரூட்டங்கொண்ட ஆரம்ப உரையுடன் கூடிய விதிமுறைகளைச் சமர்ப்பித்தார். பிரெட்ரிக் தன் தந்தையின் மறைவுக்குப் பின், தாயையும், சகோதரர்களையும் தமது தாபரிப்பில் அழைத்துக்கொண்டார். அந்நாட்களில் மிக உயர்ந்த சட்டத்துறைப் பதவியான ''சேம்பர் ஒவ் கொமர்ஸ்'' தாபனத்தின் வேண்டுகோளின் பேரில் பிரெட்ரிக் வர்த்தகச் சட்டத் தலைவராக உயர்ந்ததுடன், இலக்கிய கலாநிதிப்பட்டமும் பெற்றார். லியோன் நகரத்தில் பேராசிரியர் பதவி ஏற்ற பிரெட்ரிக் ஓசானம் முதல் வருடத்திலேயே 47 விரிவுரைகளை நிகழ்த்தினார். ''அனல்ஸ்'' எனும் ஏட்டின் ஆசிரியராகவும் கடமையாற்றினார். 1840 ஆம் ஆண்டு அன்புத் தாயாரின் மரணம் இவரைத் துயரத்தில் ஆழ்த்தியது. இவரது நண்பரான பியரேலக்கோடயர் டொமினிக்கன் சபையில் சேரவே, தானும் அந்த யோசனையுடன் தனது ஆசிரியரான பியரே நொயிரட்டிடம் சென்று ஆலோசனை கேட்டார். ''உனது பேனா உனக்கு வாளாகட்டும், உலகை மாற்றும் கடமை உன்னை அழைக்கிறது'' என்று ஆசிரியர் கூறித் துறவியாகும் எண்ணத்தைக் கைவிடும்படி கேட்டுக்கொண்டார். பிரெட்ரிக் ஓசானம் கல்வியமைச்சர் திரு. கௌசினைச் சந்தித்து, போட்டிப் பரீட்சை ஒன்றில் வெற்றி பெற்றுச் சொர்போன் நகரப் பேராசிரியர் ஆனார் விரிவுரையாற்றும் வேளைகளில் மாணவர்கள் மத்தியில் இறை விசுவாசத்தையும் பரப்பினார்.

1841ஆம் ஆண்டு ஆனி மாதம் 23ஆம் திகதி தனது 28 ஆவது வயதில், அன்றையப் புகழ்மிக்க அறிவாளி ஒருவரின் மகளாகிய ''அமெலி சோலக் குயிரொக்ஸ்'' எனும் மங்கையைத் திருமணம் செய்து கொண்டார். இத்தாலிய தேனிலவுப் பயணத்தின் போது, இவர்கள் பரிசுத்த பாப்பரசர் 16ஆம் கிறகோரியாரைச் சந்தித்து உரையாடும் பேறு பெற்றனர். பிரெட்ரிக் ஓசானம் முன்னணி அறிஞன் என்ற வகையிலும், குடும்பஸ்தன் என்ற வகையிலும், வின்சென் டி போல் சபையின் அங்கத்தவன் என்ற வகையிலும், கடுமையாக உழைத்தார்.

திருமணவாழ்வின் நான்காம் ஆண்டில் உதித்த பெண் குழந்தைக்கு மேரி எனும் பெயர் சூட்டினார். மீண்டும் ஒரு முறை றோமைநகர் சென்ற வேளை பரிசுத்த பாப்பிறை 9ஆம் பத்திநாதர் தனிப்பட்ட முறையில் பிரெட்ரிக் குடும்பத்தினருக்குத் திருத் தரிசனந்தந்தார். இவரது இலட்சியப் பணியில் மனைவி அமெலியும் தனது முழு ஒத்துழைப்பையும் கொடுத்தாள். விரிவுரையாளர் எனும் பதவியில் தமது முழுக் கவனத்துடன் பணி புரிந்த ஒசானம், ''பாப்பரசர்'' ''சமயசபைகள்'' ''சந்நியாசசபைகள்'' என்ற மூன்று தொடர்ச்சியான விரிவுரைகளை வழங்கினார். வின்சென் டி போல் சபைச் சேவைகள், பரீட்சைகள், விரிவுரைகள், ஐரிஷ் நாட்டுப் பஞ்ச நிவாரணப் பணி, எழுத்து, திருச்சபையைக் காக்கும் பணி, அரசியல் சுதந்திரம், கல்வி போன்றவற்றில் மிகுந்த ஆர்வங்காட்டிக் கடுமையாகச் செயலாற்றியதன் விளைவாக 1846ஆம் - 1847ஆம் ஆண்டுகளில் இவரது உடல்நிலை படுமோசமாகப் பாதிக்கப்பட்டது. இதன் விளைவாக இவர் கட்டாய ஓய்வு எடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இத்தாலிக்கு அனுப்பி வைக்கப்பட்ட இவர் 1848இல் மீண்டும் பிரான்ஸ் திரும்பினார். அங்கு புரட்சியின் விளைவாகத் தொழில் இழந்த கோடிக்கணக்கான தொழிலாளர் நலனுக்காகப் போராடினார். 1851ஆம் ஆண்டு லண்டன் பொருட்காட்சிக்குச் சென்றபோது, லண்டனின் கிழக்குப் பகுதியில் ஐரிஸ் குடியேற்றவாசிகள் வாழ்ந்த சேரிப்புறங்களை வின்சென் டி போல் சபையினருடன் சென்று பார்வையிட்டார். 1852ஆம் ஆண்டு மீண்டும் உடல்நிலை பாதிப்புற்றதும், ஓய்வு பெறும் பொருட்டு இத்தாலி செல்ல நேர்ந்தது. அதன் பின்பு ஸ்பெயினுக்குச் சென்று, புதிய ஆலோசனைச் சபைகளை உருவாக்கித் தமது உரைகளால் அவற்றிற்கு வலுவும், உயிரும் அளித்தார். சியன்னா நகரிலும் சபையொன்றை ஸ்தாபிக்க முனைந்தும் வெற்றி கிட்டவில்லை. ஆயினும் இவரது செபத்தின் வல்லமையால் புனித வின்சென் டி போல் திருநாளன்று சியன்னாவில் இரு சபைகளை உருவாக்கியதாக அவரது நண்பர் பென்டோலா எழுதிய கடிதம் ஒசானத்துக்கு கிடைத்த வெற்றியாகும்.

1853ஆம் ஆண்டில் தன் இறுதி நாள் நெருங்குவதை உணர்ந்த ஒசானம் பிறந்த மண்ணுக்குத் திரும்பினார். இறுதிப் படுக்கையில் ''இறைவா நீர் அழைத்தால் எனக்கு முறையிட உரிமையில்லை'' என்று இறைசித்தத்திற்குப் பணிந்த மனதுடன் செபித்தார். 1853இல் புரட்டாதித் திங்கள் 7ஆம் நாள் இறுதித் திருவருட்சாதனங்களைப் பெற்றுக் கொண்டார். 8ஆந் திகதி அன்று ''என் தேவனே, என் தேவனே, என் மீது இரக்கமாயிரும்'' என்று கூவினார். அவரது குடும்பம் அவரைச் சூழ்ந்து நிற்க, அடுத்த அறையில் அவ்வூர்த் தரும சபையினர் செபித்துக் கொண்டிருக்கத் தனது ஆவியை இறைவன் கையில் ஒப்புவித்தார். எண்ணிலடங்காத குருக்கள், நண்பர்கள், அறிவாளிகள், வின்சென் டி போல் சபை உறுப்பினர் திரண்டு நிற்கத் துக்கப் பாடற் பூசை ஒப்புக் கொடுக்கப்பட்டபின் அவரது உடல் காமலைற் ஆலயத்தில் நல்லடக்கஞ் செய்யப்பட்டது.

# புனித வின்சென் டி போல் சபையின் பந்திகளின் விதிகள்

1. பெயர் :

புனித வின்சென் டி போல் சபையின் பந்தி. (குறிப்பாகச் சிறப்புப் பெயர்கள் சேர்த்துக் கொள்ளப் படலாம்).

2. உற்பத்தி :

இச் சபையானது பிரெட்ரிக் ஓசானம் என்பவரைத் தலைவரா கக் கொண்ட பல்கலைக்கழக மாணவர்களால் பரீஸ் நகரில் 1833ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. கிறீஸ்தவ நெறிமுறைகளை அனுசரிக்க மக்களைத் தூண்டுவதும், செபத்தாலும், பிறர் அன்புக் கிரிகைகளா லும், மக்களின் துயர் துடைப்பதும் இச்சபையின் குறிக்கோள்களாகும்.

புனித வின்சென் டி போல் இவ்வித தரும சேவைகளில் ஈடுபட்டி ருந்தமையால், இச் சபைக்கு அவரின் நாமம் சூட்டப்பட்டது.

3. நோக்கங்கள் :

அ) மக்கள் மத்தியிலும். குறிப்பாக உறுப்பினர் மத்தியிலும், உறுப்பினர்கள் தங்கள் முன்மாதிரிகையாலும், ஆலோசனை கள் வாயிலாகவும் கிறீஸ்தவ வாழ்வை ஊக்குவித்தல்.

ஆ) மறை வாழ்விலும், சமய நெறியிலும், அக்கறையின்றி இருப்பவர்களை ஆலோசனைகள், தூண்டுதல்கள் மூலம் வழி நடத்துதல்.

இ) வீட்டுத் தரிசனைகள் மூலம் வாழ்க்கையின் அடி மட்டத் தில் துன்புறுவோரின் துயர் துடைக்கப் பொருளுதவிகளை யும், மறு தேவைகளையும், இரகசியமான முறையில் வழங் குதல்.

ஈ) சமய, சமூக, நீதி சார்ந்த அறிவை வளர்க்கும் நோக்க மாக வேதாகமம், மற்றும் நல் வாசினைக்கு ஏற்ற நூல் கள், பத்திரிகைகள், சஞ்சிகைகள் முதலியவற்றைப் பரப் புதல்.

உ) இன்னலுறும் சகல மக்களுக்கும், எவ்வித வேறுபாடுகளும் இன்றி உதவி வழங்குதல்.

ஊ) சகல செயற்பாடுகளிலும் இரகசியம் காப்பாற்றப்பட வேண்டும்.

4. அங்கத்துவம் :

அ) சபையின் தத்துவங்களை ஏற்றுக் கொள்ளும் குருக்கள், துறவியர் தவிர்ந்த அனைத்துக் கத்தோலிக்கரும் இதில் அங்கத்துவம் வகிக்கலாம்.

ஆ) புதிய அங்கத்தவர்களைச் சேர்த்துக் கொள்ளுதல்; பந்திக் கூட்டங்களில் தீர்மானிக்கப்பட்டு, ஆன்ம ஆலோசகரின் அனுமதியுடன் நடைபெற வேண்டும்.

இ) அங்கத்தவர்கள் தத்தமது சொந்தப் பங்கில் உள்ள பந்திகளில் அங்கத்துவம் வகிப்பதே விரும்பத்தக்கது.

ஈ) ஒரு பந்தியில் உறுப்பினராயிருப்பவர் பிறிதொரு பந்தியில் அங்கத்தவராய் இருத்தலாகாது.

உ) செயல் அங்கத்தவர்கள் :
இவர்கள் பந்தியின் சகல செயற்பாடுகளிலும் தம்மை முழுமையாக ஈடுபடுத்தி வருபவர்கள்.

ஊ) மகிமை அங்கத்தவர்கள் :
இவர்கள் பந்தியின் செயற்பாடுகளில் நேரடியாகப் பங்கு பற்ற முடியாதவர்கள், தம்முடைய செபங்களாலும், பொருளாலும், நிதியாலும் பந்திக்கு உதவி செய்பவர்களாவர். பந்தியின் வருடாந்தப் பொதுக் கூட்டங்களில் பங்குபற்ற இவர்கள் அழைக்கப்படுவர்.

5. ஆன்ம ஆலோசகர்

அ) பங்குத் தந்தையே பந்தியின் ஆன்ம ஆலோசகராவார்.

ஆ) பந்திக் கூட்டங்கள் யாவற்றிலும் இயலுமான வரையில் சமுகம் தந்து, உரையாடல்களில் பங்கு பற்றி, ஆன்ம விடயங்களில் தேவையான ஆலோசனைகள் வழங்கி, தீர்மானங்களில் கலந்து கொள்வார்.

6. செயற்குழு உறுப்பினர்கள் :

அ) ஓர் பந்தியில் ஆறு (6) மாதங்கள் உறுப்பினர்களாயிருந்த சகலரும் பின்வரும் பதவிகளுக்குத் தெரிவு செய்யப்படலாம்.

i) தலைவர்
ii) உப தலைவர்
iii) செயலாளர்
iv) உப செயலாளர்
v) பொருளாளர்

ஆ) பதவிக்கால எல்லை :

தலைவர் உட்படச் செயற்குழு உறுப்பினர்கள் இரண்டு (2) வருடங்கள் பதவி வகிப்பர்.

ஒருவர் மீண்டும் ஒரு முறை தேர்ந்தெடுக்கப்படலாம். ஆனால் ஒருவரும் தொடர்ச்சியாக இரண்டு (2) தவணைகளுக்கு மேல் அதே பதவிக்குத் தொடர்ந்து தெரிவு செய்யப்படல் ஆகாது. ஆனால் வேறு பதவிகளை வகிக்கலாம்.

இவ்வொழுங்கு இப்படி இருப்பினும், பதவிகளைப் பந்தி உறுப்பினர்கள் தவணை முறையில் பகிர்ந்து கொள்வதே மிகவும் விரும்பத் தக்கது.

இ) ஒரே குடும்பத்தைச் சார்ந்தவர்களில் ஒருவர் மட்டுமே மேற் குறிப்பிடப்பட்ட பதவிகளில் ஒன்றை வகிக்கலாம்.

7. தலைவரின் கடமைகள் :

அ) பந்தியின் சகல கூட்டங்களிலும் தலைமை வகிப்பார்.
ஆ) பந்தியை நிர்வகிப்பதும், வழி நடாத்துவதும், விருத்தி அடையச் செய்வதும்.
இ) விண்ணப்பங்களை ஏற்றுச் சபையில் சமர்ப்பித்தல். விசேட கூட்டங்களைக் கூட்டுதல். விதிகள், தீர்மானங்கள் முதலிய வற்றை நடைமுறைப்படுத்துதல்.

8 உப தலைவரின் கடமைகள் :

அ) த லவர் இல்லாத சமயங்களில் இவர் கூட்டங்களுக்குத் தலைமை வகிப்பார்.
ஆ) பந்திகளின் செயற்பாடுகள் யாவற்றிலும் தலைவருக்கு ஒத்தாசையாக இருப்பார்.

9. செயலாளரின் கடமைகள் :

அ) கூட்ட நிகழ்ச்சிகளைச் சரிவரக் குறித்து வைத்து, அடுத்து வரும் கூட்டத்தில் அறிக்கை சமர்ப்பிப்பார்.
ஆ) அங்கத்தவரின் பெயர், முகவரி, தொழில், சேர்க்கப்பட்ட திகதி ஆகிய விபரங்கள் அடங்கிய அட்டவணையைத் தயாரித்து வைத்திருப்பார்.
இ) பந்தியின் ஏடுகள், அறிக்கைகள், ஆவணங்கள் முதலிய வற்றிற்கும் இவர் பொறுப்பாயிருப்பார்.
ஈ) சகல கடிதத் தொடர்புகளையும் இவரே நடாத்துவார்.

10. உப செயலாளரின் கடமைகள் :

அ) செயலாளர் இல்லாத சமயங்களில் அவருடைய செயற்பாடுகளைக் கவனிப்பார்.

ஆ) செயலாளரின் கடமைகளில் அவருக்கு உதவியாக இருப்பார்.

11. பொருளாளரின் கடமைகள் :

அ) இவர் பந்தியின் நிதிக்குப் பொறுப்பாக இருப்பார்.

ஆ) வரவு செலவு விபரங்களைத் தயாரித்து, பந்தியின் ஒவ்வோர் கூட்டத்திலும் சமர்ப்பிப்பார்.

இ) பந்தியினால் நியமிக்கப்பட்ட கணககுப் பரிசோதகரின் அங்கீகாரத்துடன், பந்தியின் வருடாந்த வரவு செலவுத் திரட்டைத் தயாரித்து, வருடாந்தப் பொதுக்கூட்டத்தின் போது அதனைச் சமர்ப்பிப்பார்.

ஈ) பந்தியின் உதவி பெறுவோர் சம்பந்தமான விபரங்கள் அடங்கிய விபரக் கொத்தைத் தயாரித்து வைத்திருப்பார்

12. கூட்டங்கள்

அ) பந்தியின் கூட்டங்கள் மாதத்தில் ஒரு முறையாவது கூட்டப்பட வேண்டும். இதற்கான திகதி, நேரம், இடம் முதலியன பந்தியால் தீர்மானிக்கப்பட வேண்டும்.

ஆ) தலைவரின் ஆலோசனையுடன் செயலாளர் கூட்ட நிகழ்வுகளைத் தயாரிக்க வேண்டும்.

இ) தீர்மானங்கள் சாதாரண பெரும்பான்மை வாக்குகளால் எடுக்கப்பட வேண்டும்.

ஈ) கூட்டங்கள் நடைபெறும் முறை :

i) ஆரம்ப செபம்
ii) ஞான வாசினை - விளக்கவுரை
iii) செயலாளர் அறிக்கை
iv) பொருளாளர் அறிக்கை
v) கடிதங்கள்
vi) புதிய அங்கத்தவர்கள் விண்ணப்பம் - பரிசீலனை - ஏற்றுக் கொள்ளல்.
vii) உதவி பெறும் குடும்ப அறிக்கை
viii) உதவி கோரும் குடும்ப அறிக்கை
ix) பந்தியின் நலன், விருத்தி, ஆகியன பற்றி அங்கத்தவர் ஆலோசனைகள்

x) வரவடையாளமிடல்
xi) சபை நடைமுறைகள் பற்றி அங்கத்தவர்கள் அறிக்கை சமர்ப்பித்தல்
xii) சேகரித்த பணம் சமர்ப்பித்தல்
xiii) இரகசியப் பை மூலம் பணம் சேர்த்தல்
xiv) முடிவுச் செபம்

13 வருடாந்தப் பொதுக் கூட்டம் :

அ) பந்திகளின் நிதி ஆண்டு சனவரி மாதம் முதல் டிசம்பர் மாதம் வரையுமாகும். பந்திகள் தமது வருடாந்தப் பொதுக் கூட்டங்களைப் பிரதி வருடமும் பெப்ருவரி மாதம் முடிவதற்கு முன்பு கூட்டவேண்டும். இது பற்றிய அறிவித்தல் (14) பதினான்கு நாட்களுக்கு முன்பு அங்கத்தவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டும்.

ஆ) வருடாந்த அறிக்கை, கணக்குப் பரிசோதகரின் அங்கிகாரம் பெற்ற வரவு செலவுத் திரட்டு முதலியன உறுப்பினர் யாவருக்கும் கொடுக்கப்பட வேண்டும். பந்தியின் உறுப்பினர் அல்லாத எவரும் கணக்கும் பரிசோதகராகப் பந்தியால் நியமிக்கப்படலாம்.

இ) மேற்படி வருடாந்த அறிக்கையின் பிரதிகள் மத்திய சபைக்கும் மற்றும் பந்திகளுக்கும் வெகு சீக்கிரத்தில் அனுப்பி வைக்கப்பட வேண்டும்.

ஈ) விசேட பொதுக் கூட்டங்கள் :
பிரதான விடயங்களை ஆராயும் பொருட்டு விசேட பொதுக் கூட்டங்களைத் தலைவரின் அனுமதியுடன் செயலாளர் கூட்டலாம்.

14. பந்தியின் நிதி

அ) பந்தியின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்கான தகுந்த முறைகளில் நிதியைச் சேகரிக்கலாம்

ஆ) நிதியை வங்கியில் அல்லது ஆன்ம ஆலோசகரிடம் வைத்துக் கொள்ளலாம். பணத்தைப் பந்தியால் தீர்மானிக்கப்பட்ட வங்கியில் சேமிப்பு அல்லது நடைமுறைக் கணக்கில் வைத்துக் கொள்ளலாம்.

இ) வங்கிக் கணக்கை ஆன்ம ஆலோசகர், தலைவர், பொருளாளர் ஆகியோர் காரியப்படுத்தலாம். வங்கிப் பணம் மீளப் பெறுவதற்கு ஆன்ம ஆலோசகர், பொருளாளர் அல்லது தலைவர் ஆகியோரால் காசோலைகள் கைச்சாத்திடப்பட வேண்டும்.

ஈ) சகல செலவினங்களும் பந்தியின் அனுமதியுடனேயே செலவு செய்யப்பட வேண்டும்.

உ) பந்தி செயலிழக்கும் பட்சத்தில் அதன் நிதி பந்தி இணைந்துள்ள மத்திய சபையிடம் கையளிக்கப்பட வேண்டும். அச்சபை இப்பணத்தை நம்பிக்கை நிதியமாக வைத்து, பந்தி மீண்டும் செயற்படும் போது அதற்குத் திரும்பவும் வழங்கலாம், அல்லது அச்சபையின் தீர்மானத்திற்கு அமைய உபயோகிக்கலாம்.

15. மத்திய சபை :

அ) மத்திய சபை பந்திகளின் இணைப்புச் சபையாக இருந்து, பந்திகளுக்கு ஆலோசனை வழங்கி பந்திகளிடையே பரஸ்பர உறவை ஏற்படுத்தும்.

ஆ) பந்திகளின் தலைவர்கள், செயலாளர்கள், பொருளாளர்கள் ஆகியோர் இதன் உறுப்பினராவர்.

இ) பந்தியின் உதவிப் பணமாக ரூபா 60/- ஐ வருடந்தோறும் மேற்படி சபைக்கு செலுத்தும்.

ஈ) வருடாந்தப் பொதுக் கூட்டத்தில் அங்கீகரிக்கப்பட்ட வருடாந்த அறிக்கை, வரவு செலவுத்திரட்டு ஆகியவற்றை பந்திகள் மத்திய சபைக்கு அனுப்பி வைக்கும்.

16. புனித வின்சென்டி போல் சபையினர் பக்தியருட்சியுடன் கொண்டாட வேண்டிய திருநாட்கள் :

அ) புனித வின்சென்டி போல் தினம் - செப்ரெப்பர் மாதம் 27 ஆம் திகதி.

ஆ) மரியன்னையின் அமலோற்பவ திருநாள் - டிசெம்பர் மாதம் 8 ஆம் திகதி.

17. மேலே குறிப்பிடப்பட்ட விதிமுறைகளை மாற்றவோ, திருத்தவோ, புதியனவற்றைச் சேர்க்கவோ பந்தியினால் எடுக்கப்படும் தீர்மானங்கள் மத்திய சபையினால் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

# கூட்டம் ஆரம்பிக்கும் போது செபம்

பிதா சுதன் பரிசுத்த ஆவியின் பெயராலே ஆமென்.

முதல்வர் : பாப்பரசரின் விசேட நோக்கங்களை எமது செபங்களில் நினைவு கூர்வோமாக. உலகம் முழுவதிலுமுள்ள எமது சகோதர, சகோதரிகளுடனும், குறிப்பாக நாங்கள் ஒன்றிணைந்துள்ள நாடுகளில் உள்ளவர்களுடனும் ஆத்மீக ஐக்கியத்தில் ஒன்று பட்டுச் செபிப்போமாக. எங்கள் நோக்கங்களை அவர்களது நோக்கங்களுடன் அன்பினால் இணைத்துச் செபிப்போமாக.

முதல்வர் : பரிசுத்த ஆவியே, தேவரீர் எழுந்தருளி வாரும்

சபையோர் : உமது விசுவாசிகளின் இதயங்களை நிரப்பி, உமது நேசத்தின் அக்கினியை அவர்களிடத்தில் பற்றியெரியச் செய்தருளும்.

முதல்வர் : ஆண்டவரே, உமது பரிசுத்த ஆவியை எங்களிடத்தில் அனுப்பியருளும்.

சபையோர் : அப்போது எங்கள் இதயங்களைப் புதுப்பித்தருளுவீர்.

செபிப்போமாக

ரிசுத்த ஆவியின் பிரகாசத்தினால் விசுவாசிகளின் இதயங்களைப் படிப்பித்தருளிய சருவேசுரா, நாங்களும் அதே பரிசுத்த ஆவியின் வரத்தினால், நல்லவைகளை விரும்பவும், அவருடைய ஆறுதலை எப்போதும் பெற்று அக்களிக்கவும் கிருபை பண்ணியருளும் சுவாமி ஆமென்.

பரலோகத்தில் இருக்கிற எங்கள் பிதாவே..............
அருள் நிறைந்த மரியாயே வாழ்க!..............

முதல்வர் : யேசுவின் திரு இருதயமே.

சபையோர் : எங்கள் பேரில் இரக்கமாயிரும்.

முதல்வர் : மாசில்லாமல் உற்பவித்த பரிசுத்த மரியாயே.

சபையோர் : எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

முதல்வர் : புனித வின்சென் டி போலே

சபையோர் : எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்

பிதா சுதன் பரிசுத்த ஆவியின் பெயராலே ஆமென்

# கூட்டம் முடியும் போது செபம்

பிதா சுதன் பரிசுத்த ஆவியின் பெயராலே. ஆமென்

முதல்வர் : புனித சூசையப்பரே.

சபையோர் : எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

முதல்வர் : புனித வின்சென் டி போலே.

சபையோர் : எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

### செபிப்போமாக

மகா தயவுள்ள யேசுநாதரே! சுவாமி தேவரீர் உம்முடைய அத்தியந்த அனலான அன்பின் அப்போஸ்தலராக புனித வின்சென் டி போல் அவர்களைத் திருச்சபையிலே எழுப்பியருளச் சித்தமானீரே. உம்முடைய ஊழியர்களாகிய அடியாரும், தேவரீருடைய அன்பிற்காக மனப்பூர்வமான இதயத்துடன் தங்கள் உடமைகளைத் தேவையான வறியவர்களுக்கு வழங்கவும், அவர்களது ஆத்மீக இரட்சிப்புக்காகத் தங்களையே தத்தம் செய்யவும் நீரே கிருபை கூர்ந்தருளும். இந்த மன்றாட்டுக்களை எல்லாம், பிதாவோடும், பரிசுத்த ஆவியோடும் என்றென்றும் வாழ்ந்து ஆட்சிபுரியும் ஆண்டவராகிய யேசுக் கிறீஸ்துவின் திருமுகத்தைப் பார்த்துத் தந்தருளும். ஆமென்.

# உபகாரிகளுக்காகச் செபம்

மகா இரக்கமுள்ள யேசுவே! சுவாமி தேவரீர் உமது நாமத்தினால் தருமக் கிருத்தியங்களைச் செய்வோருக்கு நூறு மடங்கான ஆசீர்வாதத்தையும், நித்திய மோட்ச இராச்சியத்தையும் வாக்குப் பண்ணியருளினீரே. எங்கள் வறியவர்களுக்கு உபகாரம் செய்கின்றவர்கள் பேரிலும் தேவரீருடைய வரப்பிரசாதங்களைப் பொழிந்தருளும். ஆமென்.

# தேவதாயின் அடைக்கலச் செபம்

சருவேசுரனுடைய பரிசுத்த மாதாவே! இதோ உம்முடைய அடைக்கலமாக ஓடி வந்தோம். நாங்கள் எங்கள் அவசரங்களிலே வேண்டிக் கொள்ளுகிறதற்குத் தாயே! நீர் பாராமுகமாய் இராதேயும். ஆசீர்வதிக்கப்பட்டவளுமாய், மோட்ச மகிமை உடையவளுமாய் இருக்கிற நித்திய கன்னிகையே! சகல ஆபத்துக்களிலுமிருந்து எங்களைப் பாதுகாத்தருளும். ஆமென்.

மரித்த விசுவாசிகளுடைய ஆத்துமங்கள் சருவேசுரனுடைய இரக்கத்தினால் சமாதானத்தில் இளைப்பாறக்கடவன. ஆமென்.

### சபையின் ஸ்தாபகர்

## பிரெட்ரிக் ஓசானம்

### அவர்களுக்காகச் செபம்

எல்லாம் வல்ல இறைவா! முத்திப் பேறுபெற்ற பிரெட்ரிக் ஓசானத்தினதும் அவரது தோழர்களினதும் இதயங்களிலே, ஏழைகள் மீது அன்பினைஉண்டாக்கி, வறுமையிலும் வாடும் அம்மக்களின் ஆன்ம, சரீர துன்பங்களுக்கு நிவாரணம் புரியும் ஓர் சபையை ஏற்படுத்தும் வண்ணம் ஊக்குவித்த தேவரீர், அச்சபை மூலமாகச் செய்யப்படும் தரும நற்கிரிகைகள் உமது திருச் சித்தத்திற்கும், மகிமைக்கும் ஏற்றனவாய் இருக்குமானால், அவற்றை அங்கீகரித்து, ஆசீர்வதித்து, விண்ணுலகில் உம்மை முகமுகமாய்த் தரிசிக்கும் பேறுபெற்ற பக்தியுள்ள, தேவ தொண்டராகிய, முத்திப்பேறுபெற்ற பிரெட்ரிக் ஓசானம் அவர்கள் உமது வரங்களை எமக்குப் பெற்றுத் தரும் வல்லமைமிக்க சலுகைக்காரராய் விளங்கவும், அதன் வழியாகத் திருச்சபை அவரை ஓர் புனிதர் நிலைக்கு உயர்த்தி மகிமைப் படுத்தவும் செய்தருள வேண்டும் என்று எங்கள் ஆண்டவராகிய யேசுக் கிறிஸ்துவின் மூலமாக உம்மை வேண்டிக் கொள்கின்றோம். ஆமென்.

பரலோகத்தில் இருக்கிற எங்கள்...............
அருள் நிறை மரியே........ ...
பிதா, சுதன், பரிசுத்த ஆவியின் பெயராலே ஆமென்.

